# இருளில் ஒளி





வங்காளி மூல ஆசிரியர் :

**சரத் சந்த்ர சட்டோபாத்யாயர்**

தமிழ்ப் படுத்தியவர் :

**வித்வான் ச. வி. ஸ்ரீநிவாஸ சர்மா**



**சூடாமணிப் பிரசுராலயம்**

கோபாலபுரம்

கதீட்ரல் போஸ்டு, சென்னை



[விலை அணா ஆறு

# இருளில் ஒளி

## [1]

பல நாட்களுக்கு முந்தி நடந்த செய்தி : ஸத்யேந்திர சௌதுரி ஜமீன்தார் வீட்டுப் பிள்ளை. பீ. ஏ. பட்டம் பெற்று வீட்டுக்கு வந்து சேர்ந்த பிறகு ஒருநாள் அவன் தாய் அவனிடம், "அப்பா! ஸத்யா! நான் சொல்வதைக் கேள்: அந்தப் பெண் லக்ஷ்மியைப்போல் அழகாய்த்தான் இருக்கிருள். நீ வேண்டுமானுல் போய்ப் பார்த்துவிட்டு வா" என்ருள்.

ஸத்யேந்திரன் தலையை அசைத்து, "என்னுல் இப்பொழுது முடியாது, அம்மா. ஏனென்ருல் அப்புறம் மேல் பரிக்ஷையில் தேர்ச்சி பெற முடியாது" என்ருன்.

"ஏன் முடியாது? அவள் என்னுடன் வீட்டில் இருக்கப் போகிருள்; நீயோ கல்கத்தாவில் இருந்து படிக்கப் போகிருய். நீ பரிக்ஷையில் தேர்ச்சி பெறுவதற்கு இது எப்படிப் பாதகமாக அமையும் என்பதுதான் எனக்குத் தெரியவில்லை."

"இல்லை யம்மா; அது சரி அல்ல. எனக்கு இப்பொழுது ஒழியாது" என்று சொல்லிக்கொண்டே வெளியே போகப் புறப்பட்டான் ஸத்யேந்திரன். இதற்குள் அவன் தாய், "நில்லு; போகாதே. ஒரு வார்த்தை கேட்டுவிட்டுப் போ.

இன்னும் ஒன்று சொல்ல வேண்டும்" என்று அவனை மறித்து நிறுத்தி, "ஸத்யேந்திரா! நான் அவர்களுக்கு வாக்குக் கொடுத்துவிட்டேன். நீ என் வார்த்தையைக் காப்பாற்ற மாட்டாயா?" என்று கேட்டாள். ஸத்யேந்திரன் திரும்பி நின்று சற்று மனவருத்தத்துடன், "என்னிடம் ஒன்றும் கேட்காமல் ஏன் வாக்குக் கொடுத்தாய்?" என்று திருப்பிக் கேட்டான்.

பிள்ளையின் சொற்களைக் கேட்ட தாய்க்கு மனம் மிகவும் வருந்தியது; "அப்பா! அது என் பிசகுதான். ஆனால் நீ உன் தாய் வார்த்தையைக் கேட்க மாட்டாயா? மேலும், பாவம்! அந்தப் பெண்ணின் தாய் ஒரு கைம்பெண்; ரொம்ப ஏழை, வேண்டாம், என் பேச்சைக் கேள். பேசாமல் ஒப்புக்கொள்" என்று கூறினாள். "நல்லது; அப்புறம் சொல்லுகிறேன்" என்று சொல்லிவிட்டு ஸத்யேந்திரன் வெளியே போய்விட்டான்.

ஸத்யேந்திரன் அவளுக்கு ஒரே பிள்ளை. அவள் கணவன் இறந்து எட்டு வருஷங்களாயின. அப்போது முதல் குமாஸ்தா, காரியஸ்தர்களின் உதவியைக்கொண்டு தன் பெரிய ஜமீனைத் தானே நிர்வகித்து வந்தாள். மகன் கல்கத்தாவில் படித்துக்கொண்டிருந்தான். ஆதலால் அவனுக்கு ஜமீனைப்பற்றி எவ்விதக் கவலையும் ஏற்படவில்லை. தன் மகன் வக்கீல் பரீக்ஷையில் தேறி வீட்டுக்கு வந்ததும், அவனுக்குக் கல்யாணத்தைச் செய்து வைத்துத் தன் மகனிடத்திலும் மருமகளிடத்திலும் ஜமீன் பொறுப்பை ஒப்பித்துவிட்டுக் கவலையற்றிருக்கலாம் என்று எண்ணியிருந்தாள் அவள். தவிர, இதனிடையில் அவனிடம் குடும்பப் பொறுப்பை விட்டுவிட்டு அவனுடைய மேற்

படிப்பைக் கெடுக்கக் கூடாது என்றும் எண்ணினுள். ஆனுல் சில விஷயங்கள் இடையில் நேர்ந்தன.

கணவன் இறந்த பிறகு அவ்வளவு நாட்களாக வீட்டில் எந்த விசேஷமும் நடைபெறவில்லை. ஒருநாள் அவள் ஏதோ ஒரு விரதத்தின் நிமித்தம் ஊரிலுள்ளவர் களைச் சாப்பிட அழைத்திருந்தாள். அவர்களுள் காலஞ் சென்ற அதுல சந்திர முகர்ஜியின் ஏழை மனைவியும் தன் பதினெரு வயதுப் பெண்ணேடு வந்திருந்தாள். அந்தப் பெண் வெறும் அழகு மாத்திரமன்றி, அவ்வளவு சிறு வயதிலேயே சிறந்த குணங்களும் உடையவளாக இருந் தாள். அவளோடு இரண்டொரு வார்த்தைகள் பேசிய வுடனேயே ஸத்யேந்திரனுடைய தாய் இதை அறிந்து கொண்டாள். பெண் மனத்துக்கு மிகவும் பிடித்திருந்தாள். அதனுல் தனக்குள், "நல்லது, நான் ஸத்யனுக்கு இவளை ஒருமுறை காட்டுகிறேன்; பார்த்த பிறகு அவன் சம்மதிக்க மாட்டேன் என்று சொல்லுகிருனு, பார்க் கிறேன்?" என்று சொல்லிக் கொண்டாள்.

மறுநாள் மத்தியான்னம் ஸத்யேந்திரன் சாப்பிடுவதற் காகத் தன் தாயின் அறைக்குள் நுழைந்ததும் திகைத்து விட்டான். அவன் சாப்பிட உட்காரும் இடத்திற்கு எதிரில் ஓர் ஆஸனத்தில் வைரம், முத்து முதலியவற்ரு லான நகைகளை, அணிந்து ஸாக்ஷாத் லக்ஷ்மிதேவியோ வெனத் தோன்றும்படி ஓர் அழகிய பெண் உட்கார்ந்திருந் தாள்.

தாயும் அறைக்குள் வந்து, "சாப்பிட உட்கார்" என்ருள். ஸத்யேந்திரனுக்கு ஒன்றும் தோன்றவில்லை.

சற்று வாய் குளறிக் குளறி, "இங்கே என்ன? வெளி யிலேயே உட்காருகிறேன்" என்று சொன்னான்.

தாய் புன்னகையுடன், "நீ அவளைக் கல்யாணம் செய்துகொண்டு விட்டாயா, என்ன? இந்தச் சிறு பெண் ணிடம் உனக்கு என்ன வெட்கம்?" என்று கேட்டாள்.

"எனக்கு யாரைக் கண்டும் வெட்கம் இல்லை" என்று சொல்லிவிட்டுச் சற்றும் மனமில்லாமலே அவளுக்கு எதிரிலுள்ள அந்த ஆஸனத்திலேயே அமர்ந்தான். தாய் அங்கிருந்து போய்விட்டாள். ஸத்யேந்திரன் அவசர அவசரமாக இரண்டே நிமிஷங்களில் ஏதோ ஒரு மாதிரி யாகத் தன் சாப்பாட்டை முடித்துக்கொண்டு எழுந்து தன் அறைக்கு வந்து சேர்ந்தான். அதற்குள் அவனுடைய நண்பர் பலர் அங்கு வந்திருந்தனர். தரையில் ரத்தின கம்பளம் விரிக்கப்பட்டிருந்தது. ஸத்யன் இவற்றை யெல் லாம் பார்த்தவுடன், "நான் உட்கார முடியாது; எனக்குத் தலையை வலிக்கிறது" என்று சொல்லிவிட்டு ஒரு மூலையி லிருந்த தலையணையின்மேல் தலையை வைத்துக் கண்ணை மூடிப் படுத்துக்கொண்டு விட்டான்.

வங்காளத்தில் மாப்பிள்ளை தன் நண்பர்களுடன் தான் மணக்கப் போகும் பெண்ணைப் பார்ப்பது வழக்கம். அப் போது பல பரிசைஷகளும் பரிகாஸ விளையாட்டுக்களும் நடக்கும். ஆதலால்தான் ஸத்யேந்திரன் இவை யெல்லாம் தன் தாயின் வேலைகள் என்பதைத் தெரிந்துகொண்டு அவற்றில் கலந்துகொள்ளாமல் இருக்கவெண்ணித் தனக் குத் தலையை வலிக்கிறதென்று சென்று படுத்துக்கொண்டு விட்டான்.

வந்திருந்த நண்பர்கள் இதைக்கண்டு ஆச்சரியமடைந் தனர். அவர்கள் மாலை வரையில் தாயம் ஆடிக்கொண்டே

ஏதேதோ பேசிக்கொண்டிருந்தனர். ஆனால் ஸத்யேந்திரன் ஒருதரங்கூடத் தன் இடத்திலிருந்து எழுந்திருக்கவும் இல்லை; விளையாடவும் இல்லை; யாரோடும் பேசவுமில்லை; யார் தோற்றார்கள், யார் ஜயித்தார்கள் என்று விசாரிக்கவும் இல்லை. இவற்றுள் ஒன்றுமே அவனுக்குப் பிடிக்கவில்லை.

மாலைப்பொழுதானதும் தன் நண்பர்கள் எல்லோரும் சென்றபின் அவன் உள்ளே நுழைந்து நேரே தன் அறைக்குப் போகப் போனான். அப்பொழுது உக்கிராண அறையிலிருந்த அவன் தாய் தாழ்வாரத்திற்கு வந்து, "ஏன் நீ இன்று இவ்வளவு சீக்கிரம் படுக்கைக்குப் போகிறாய்?" என்று கேட்டாள்.

"நான் தூங்கப் போகவில்லை; படிக்கப் போகிறேன். எம். ஏ. படிப்பென்றால் சாதாரணமல்ல. பொழுதை வீணாக்கினால் எப்படிப் பரீக்ஷையில் தேறுவது?" என்று சொல்லிக்கொண்டே மளமளவென்று மேலே போய் விட்டான் ஸத்யேந்திரன்.

அரைமணிநேரம் ஆகியிருக்கும். ஆனால் அவன் ஒரு வரிகூடப் படிக்கவில்லை. புஸ்தகம் எதிரில் உள்ள மேஜையின்மேல் திறந்து வைக்கப்பட்டிருந்தது. அவன் நாற்காலியில் சாய்ந்துகொண்டு மேலே பார்த்து உத்தரங்களை எண்ணிக்கொண்டிருந்தான். சட்டென்று அவன் நிஷ்டை கலைந்தது. ஜல்! ஒரு கணம்—மீண்டும்—ஜல்! ஜல்! ஸத்யேந்திரன் சரியாக நிமிர்ந்து உட்கார்ந்தான். தலைமுதல் கால்வரையில் ஆபரணம் அணிந்து லக்ஷ்மி ஸ்வரூபமாயிருந்த அதே பெண் மெள்ள மெள்ள வருவதைக் கண்டான்.

அவள் அவனருகில் வந்து நின்றாள். ஸத்யேந்திரன் கண் கொட்டாமல் அவளையே பார்த்துக்கொண்டிருந்தான். அவள் மிகவும் இனிமை வாய்ந்த குரலில், "அம்மா தங்கள் ஸம்மதத்தைக் கேட்டு வரச் சொன்னாள்" என்றாள்.

ஸத்யேந்திரன் சிறிதுநேரம் மௌனமா யிருந்துவிட்டு. "யார் அம்மா?" என்று கேட்டான்.

"எங்கம்மா தான்" என்றாள் பெண்.

எவ்வளவு நேரம் யோசித்தும் ஸத்யேந்திரனுக்கு இதற்கு என்ன பதில் சொல்லுவதென்பதே தெரியவில்லை. சிறிதுநேரம் பொறுத்து அவன், "எங்கம்மாவிடம் கேட்டு எல்லாம் தெரிந்து கொள்ளலாம்" என்று சொல்லி விட்டான்.

அப்பெண் போக ஆரம்பித்தவுடன் ஸத்யேந்திரன் சட்டென்று, "உன் பெயரென்ன?" என்று கேட்டான்.

"என் பெயர் ராதாராணி" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டாள் அப்பெண்.





[2]

அந்த இளநங்கையான ராதாராணியின் தியானத்திலேயே இருந்த தன் மனத்தை மிக்க பிரயாசையுடன் மீட்டுக்கொண்டு எம். ஏ. பாஸ் செய்வதற்காக ஸத்யேந்திரன் கல்கத்தா வந்து சேர்ந்தான். ஸர்வகலாசாலையின் எல்லாப் பரீக்ஷைகளிலும் பாஸ் செய்யும் வரை, என்னவானாலும் சரிதான், கல்யாணம் செய்து கொள்ளுவதில்லையென்று சங்கல்பம் செய்துகொண்டான். 'ஏனெனில் குடும்ப விவகாரங்களில் சிக்கிக் கொள்வதால் மனிதனுக்குத் தன்மதிப்பு என்பது குறைய ஆரம்பித்து விடுகிறது. இன்னும்—'

ஆயினும் அவன் மனத்தில்மட்டும் ஏதோ ஒரு மாதிரியான நெகிழ்ச்சி இருந்துகொண்டே இருந்தது. எங்கேயாவது யாராவது ஒரு ஸ்திரீயைக் கண்டுவிட்டால் அந்த அழகிய சிறிய முகம் அவன் மனக்கண்முன் வந்து தோன்றும். மேலும், அவள் அவன் உள்ளத்தைக் கொள்ளைகொண்டு அதில் ஸ்திரமாக வாசஞ் செய்யலானாள்.

அவன் எப்பொழுதும் ஸ்திரீகளிடம உதாஸீனமாகவே இருப்பான். ஆனால் இப்பொழுது அகஸ்மாத்தாக வழியில் யாரேனும் பெண்ணைப் பார்க்க நேரிட்டால், நன்றாகப் பார்க்க வேண்டும் என்று அவன் மனம் விரும்பியது. எவ்வளவு முயன்றாலும் தன் பார்வையை அந்தப் பக்கத்திலிருந்து திருப்ப அவனால் முடிவதில்லை. கடைசியில் மிகுந்த

வெட்கத்தினால் அவன் சரீரம் குன்றிவிடும். அப்போது சட்டென்று அப்படியே வேறொரு பக்கமாக நழுவி விடுவான்.

ஸத்யேந்திரனுக்கு நீந்துவதில் மிகவும் பிரியம் உண்டு. அவன் வீட்டிலிருந்து கங்கை அதிக தூரத்தில் இல்லை. அதனால் அவன் தினம் ஜகந்நாத கட்டத்திற்கு ஸ்நானத் திற்குச் செல்லுவது வழக்கம்.

அன்று பௌர்ணிமை. படித்துறையில் சற்றுக் கூட் டம் அதிகமாக இருந்தது. அவன் கங்கைக் கரைக்கு வந்து மடி வேஷ்டியைத் தான் வழக்கமாக வைத்துவிட்டுப் போகும் உடியாப் பிராம்மணரிடம் வைத்துவிட்டு ஜலத் தில் இறங்க எண்ணி அவரைத் தேடினான். அப்போது நாலைந்து பேர்கள் ஒருபுறம் எதையோ பார்த்துக் கொண் டிருந்ததைக் கண்டு அவனும் அந்தப் பக்கம் திரும்பிப் பார்த்தான். பார்த்ததே அவன் அப்படியே ஆச்சரியத்தி னால் திகைத்து நின்றான்.

அன்றுவரை தான் எந்த ஸ்திரீயின் சரீரத்திலும் அவ்வளவு அழகைக் கண்டதில்லை என்ற எண்ணம் அவன் மனத்தில் பட்டது. அவளுக்கு வயது பதினெட்டு, பத்தொன்பதிற்கு மேல் இராது. சாதாரணமான கறுப்புக் கரை போட்ட வெள்ளைப் புடைவை ஒன்றையே அணிந் திருந்தாள். அவள் தேகத்தில் அப்படி நகைகளும் அதிக மாக இல்லை. அவள் மண்டியிட்டு உட்கார்ந்து நெற்றியில் சந்தன முத்திரை தரித்துக்கொண்டிருந்தாள். அவனுக்கு அறிமுகமான 'பண்டா' ஒருவர் அவளுக்குச் சிரஸிலும் புருவங்களிலும் சந்தனம் இட்டுக் கொண்டிருந்தார்.

ஸத்யேந்திரன் அருகிற் சென்று நின்றான். பண்டா வுக்கு ஸத்யனிடத்திலும் நிறைய தக்ஷிணை கிடைக்கும்.

ஆகையால் அவர் அந்த ரூபவதிக்கு மரியாதை செய்வதை விட்டுத் தன் கையிலிருந்த சந்தனம் முத்திரை முதலியவைகளைக் கீழே வைத்துவிட்டு, ஸத்யேந்திர பாபுவின் மடி வேஷ்டியை வாங்கி வைக்கக் கையை நீட்டினார்.

இருவர் கண்களும் ஒன்றையொன்று நோக்கின. ஸத்யேந்திரன் தன் மடி வேஷ்டியைப் பண்டாவின் கையில் கொடுத்துவிட்டுப் படிகளில் இறங்கி ஜலத்தை யடைந்தான். அன்று அவன் அதிக நேரம் நீந்தவில்லை. அவஸர அவஸரமாக ஸ்நானம் செய்துவிட்டு வேஷ்டி கட்டிக்கொள்ளக் கரைக்கு வந்தபோது அந்த ரூபாங்கி அங்கிருந்து சென்று கொண்டிருந்ததைப் பார்த்தான்.

அன்று முழுதும் ஸத்யேந்திரனின் மனம், 'கங்கா! கங்கா!' என்று ஸ்மரித்துக் கொண்டே யிருந்தது.

மறுநாள் காலையில் பொழுது நன்கு விடிவதற்கு முன்னரே கொடியிலிருந்து ஒரு வேஷ்டியை எடுத்துக் கொள்ளக்கூட அவகாசம் அளிக்காமல் கங்காதேவி அவனைத் தன்னிடம் இழுத்தாள்.

கரையில் வந்து நின்றதும் எழில் மிக்க அம்மடந்தை ஸ்நானம் செய்துவிட்டு அப்போதுதான் கரையேறிக் கொண்டிருந்தாள். ஸத்யன் ஸ்நானம்செய்து பண்டாவிடம் செல்லும்பொழுது அவளும் முதல் நாளைப்போல் நெற்றியில் சந்தன முத்திரை தரித்துக்கொண்டிருந்தாள். அன்றும் இருவர் கண்களும் சந்தித்தன. மின்னல்போல் ஓர் உணர்ச்சி அவன் உள்ளத்தில் பாய்ந்துசென்று தாக்கியது. அவன் ஏதோ ஒருவிதமாக வேஷ்டியை மாற்றிக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டான்.

 

## [3]

அந்த அழகியும் தினம் காலையில் ஸ்நானம் செய்ய வருகிருள் என்பதை ஸத்யன் தெரிந்துகொண்டான். அது வரை தான் அவளைச் சந்திக்காததற்குக் காரணம் தான் தினம் நேரம் சென்று ஸ்நானத்துக்கு வருவதுதான் என்றும் எண்ணினன்.

கங்கைக் கரையில் ஆறு ஏழு நாட்களாக இருவருக்கும் சந்திப்பு ஏற்பட்டு வந்தது. ஆனல் இன்றுவரை யாதொரு பேச்சு வார்த்தையும் ஏற்படச் சந்தர்ப்பம் வாய்க்கவில்லை. மேலும் கண்களுடன் கண்கள் பேசும் போது வாய் ஊமையாகவே இருந்துவிட வேண்டியது தானே? அந்த அதிரூபவதி யாராக இருந்தாலும் இருக் கட்டும். அவள் கண்களாலேயே சம்பாஷிக்கும் கலையை நன்ருகக் கற்றிருந்தாள். அதனுடன் அவள் அதில் நன்கு தேர்ந்தவளாகவும் இருந்தாள். ஸத்யனின் உள்ளம் இவ்விஷயத்தைத் தானே உணர்ந்து அநுபவித்து அதிலேயே லயித்துவிட்டது.

இன்று அவன் ஸ்நானம் செய்துவிட்டு மன நிம்மதி அற்றவனுகி வீட்டுக்குச் சென்று கொண்டிருந் தான். திடீரென்று 'தங்கஜோத் தானே' என்று யாரோ கூப்பிடுவது காதில் விழுந்தது. அவன் தலை நிமிர்ந்து பார்த்தான். ரயில்வே தண்டவாளத்துக்கு அப்பால் அதே கட்டழகி நின்றுகொண்டிருந்தாள். இடுப்பில் ஜலம்

நிறைந்த பித்தளைக் குடமும் வலதுகையில் ஈரப்புடைவை யும் அவளை அலங்கரித்துக்கொண்டிருந்தன. அவள் தலையை அசைத்துக் குறிப்பாய் அழைத்தாள். ஸத்யன் இங்குமங்கும் பார்த்துக்கொண்டே அவளருகில் சென்ருன். அவள் ஆவல் நிறைந்த பார்வையுடன் அவனை நோக்கி இனிய குரலில், "இன்று என் வேலைக்காரி வரவில்லை. தாங்கள் தயவு செய்து என்னைக் கொஞ்சதூரம் கொண்டுபோய் விட்டால் சௌகரியமா யிருக்கும்" என்று கேட்டுக் கொண்டாள். அவள் எப்பொழுதும் தன்னுடன் ஒரு வேலைக்காரியை அழைத்து வருவது வழக்கம். ஆனுல் இன்று அவள் தனியாக இருந்தாள்.

ஸத்யேந்திரனது மனத்தில் 'இது ஒழுங்கல்ல' என்ற ஒரு நினைப்பு எழுந்தது; அதைச் சொல்லவும் எண்ணினுன். ஆனுல் வாய் திறந்து, 'முடியாது' என்று சொல்லமட்டும் முடியவில்லை. அவளும் அவனுடைய மனோபாவத்தை அறிந் தவள்போல் சிறிது நகைத்தாள். இம்மாதிரியான நகைப்பை வெளியிடக் கூடிய சக்தியைப் பெற்றவர்களுக்குக் கைகூடா ததும் உலகில் உண்டோ? உடனே ஸத்யேந்திரன், "செல் லுங்கள்" என்று சொல்லிப் பின்னுலேயே நடந்தான். இரண்டு மூன்றடி தூரம் சென்றதும் அவள், "வேலைக் காரிக்கு உடம்பு சரியில்லாததால் அவள் வர முடியவில்லை. ஆனுல், அதற்காக நான் கங்காஸ்நானம் செய்யாமல் இருக்க முடியுமா? தங்களுக்கும் இந்தக் கெட்ட பழக்கம் இருக்கிறதுபோல் தோன்றுகிறது" என்ருள். ஸத்யேந் திரன் மெதுவாக, "ஆமாம். நானும் தினம் கங்காஸ்நானம் செய்து வருகிறேன்" என்ருன்.

"இங்கே தாங்கள் எவ்விடத்தில் வசிக்கிறீர்கள்?"

"என் வீடு 'சோர் பாகா'னில் இருக்கிறது."

"என் வீடு 'ஜோடா ஸாகு'வில் இருக்கிறது. தாங்கள் என்னைப் பதரியா கட்டம் வரையில் கொண்டு விட்டு விட்டால் பிறகு பெரியசாலை வழியாகப் போய் விடுவேன்."

"நல்லது."

வெகு நேரம் வரை சம்பாஷணை ஒன்றும் நடைபெற வில்லை. சித்பூர் ரோட் வந்ததும் அவள் நின்று நகைத்துக் கொண்டே, "போதும், என் வீடு பக்கத்தில்தான் இருக் கிறது. இனித் தாங்கள் போகலாம்; நமஸ்காரம்" என்றாள்.

ஸத்யனும் பதில் நமஸ்காரம் கூறிவிட்டுத் தலை குனிந்த வாறே சீக்கிரமாகத் திரும்பிச் சென்றுவிட்டான். அன் றிருந்த அவன் மன நிலையை எழுத்துக்களால் வருணிப்ப தென்பது இயலாத காரியம். யௌவன காலத்தில் பஞ்ச பாணனின் பாணங்களால் அடியுண்டு தவித்தவர்களே அதை அறிய முடியும்.

மன மயக்கம் பெற்றவர்களுக்கு நிலம், ஜலம், ஆகா யம், பாதாளம், எல்லாம் பல வர்ண சித்திரங்களாகத் தோன்றுவது ஸகஜம். அது போலவே உலகில் ஏதேனும் ஒன்றில் அதிகப் பற்று ஏற்பட்டுவிட்டால் அவர்கள் சுபாவமான அறிவை இழந்து காந்தசக்தியால் இழுக்கப் படுவதுபோல் இழுக்கப்பட்டு அந்தப் பொருளுடன் ஒன்று பட்டு விடுவார்கள்.

•

மறுநாள் காலை ஸத்யேந்திரன் தூங்கி எழுந்தபோது விடிந்து வெகு நேரமாகி யிருந்தது. உள்ளத்தில் எழுந்த உணர்ச்சி அலைகள் அவனை நிலைகுலையச் செய்தன. அன்

றைத் தினம் அடியோடு வீணுகிவிட்டதென்று நிச்சயப் படுத்திக்கொண்டான். பக்கத்தில் வேலேக்காரன் சென்று கொண்டிருந்ததைப் பார்த்து அவனே அதட்டிக் கூப்பிட்டு, "முட்டாள்! எவ்வளவு நேரமாகிறது? என்னே ஏன் எழுப்பவில்லை? உனக்கு ஒரு ரூபாய் அபராதம், போ!" என்ருன்.

வேலேக்காரன் வெலவெலத்துப் போய்த் திகைப் படைந்து ஒன்றுமே பேசாமல் நின்ருன். ஸத்யேந்திரன் இரண்டாம் வேஷ்டிகூட எடுத்துக் கொள்ளாமல் கோபத் துடன் வீட்டைவிட்டுப் புறப்பட்டு வெளியே வந்து ஒரு வாடகை வண்டி பேசி ஏறிக்கொண்டான். வண்டிக்கார னேப் பதரியாகட்டம் வழியாக ஓட்டும்படிச் சொல்லி, சாலே யின் இரு பக்கங்களிலும் மிக்க கவனத்துடன் பார்த்துக் கொண்டே சென்ருன். கங்கைக்கரையை அடைந்து படித் துறைப் பக்கம் பார்த்ததும் அவனுடைய ஆத்திரம் இருந்த இடம் தெரியாமல் அடங்கிவிட்டது. விலேமதிக்க முடியாத ரத்தினம் ஒன்று வழியில் அகப்பட்டது போன்ற ஓர் எண்ணம் அவனுக்கு ஏற்பட்டது. ஸத்யேந்திரன் வண்டியி லிருந்து இறங்கின உடனேயே அந்தப் பெண் பல நாள் பழக்கம் உடையவளேப்போல் புன்னகையோடு, "இன்று வெகு நேரமாய்விட்டதே; நான் அரை மணி நேரமாக இங்கு நின்று கொண்டிருக்கிறேன். சீக்கிரம் ஸ்நானம் செய்யுங்கள், இன்றும் என் வேலேக்காரி வரவில்லை" என்ருள்.

"இதோ! ஆய்விட்டது. ஒரே நிமிஷம்! பொறுங் கள்" என்று சொல்லிக்கொண்டே ஸத்யன் சட்டென்று தண்ணீரில் இறங்கினுன். அவனுடைய நீச்சுக்களெல்லாம்

எங்கே சென்றனவென்று தெரியவில்லை. அவசரம் அவசர மாக இரண்டு மூன்று முழுக்குப் போட்டுவிட்டுக் கரை யேறி வந்தான். வண்டியைக் காணுமையால் அவளைப் பார்த்து, "என் வண்டி எங்கே?" என்று கேட்டான்.

"நான் அதற்குச் சத்தம் கொடுத்து விட்டேன்" என் ருள் அவள்.

"நீங்கள் கொடுத்தீர்களா?"

"ஆம், கொடுத்தேன். புறப்படுங்கள்" என்று சொல் லிக்கொண்டே அவ் வணங்கு ஒரு மோஹனச் சிரிப்புச் சிரித்துவிட்டு முன்னே நடக்கலானுள்.

ஸத்யேந்திரன் தன் மனத்தை அடியோடு பறி கொடுத்துவிட்டான். இல்லையேல் அவனுக்கு 'இவை எல்லாம் எதற்காக?' என்ற சந்தேகம் ஏற்பட்டிருக்கும்.

நடந்துகொண்டே, "தங்கள் வீடு எங்கே என்று சொன்னீர்கள்? சோர்-பாகானிலா?" என்று கேட்டாள் ரமணி.

"ஆமாம்."

"அங்கே திருடர்கள் மாத்திரந்தான் வசிக்கிருர் களா?"

ஸத்யேந்திரன் திடுக்கிட்டு, "ஏன்" என்று கேட்டான்.

"தாங்கள் திருடர்களுக்கு எல்லாம் ராஜாவாக இருக் கிறீர்கள்" என்று சொல்லிவிட்டு அவள் தலையைச் சாய்த் துக் கடைக்கண்ணுல் பார்த்துப் புன்னகை செய்துகொண்டு சிறு நடை போட்டுச் சென்றுகொண்டிருந்தாள்.

இன்று அவள் இடுப்பிலிருந்த குடம் சற்றுப் பெரிய தாயிருந்தது. அதில் நிறைந்திருந்த கங்கா ஜலம் சளசள,

சளசள வென்று சத்தம் செய்வது, "அடா மூடா! குருட்டுப் பையா! ஜாக்கிரதை! இவை யாவும் கபடம். வெறும் ஏமாற்றம்! நீரில் தோன்றும் குமிழி போன்றவை" என்று அவனைக் கேலி செய்வது போல் தோன்றிற்று.

தெருத் திருப்பத்துக்கு வந்ததும் ஸத்யேந்திரன் ஸங்கோஜத்துடன், "வண்டிச் சத்தம்" என்ருன்.

அந்தப் பெண்மணி திரும்பிப் புரிய இயலாத மதுர ஸ்வரத்தில், "ஒரு விதமாக அதுவும் நீங்கள் கொடுத்தது தான்" என்ருள்.

ஸத்யேந்திரன் இந்தக் குறிப்பு மொழியின் பொருளைத் தெரிந்துகொள்ளாமல், "நான் கொடுத்தது எப்படி?" என்று கேட்டான்.

"என்னுடையது என்று சொல்லிக்கொள்ள என்னிடம் என்ன இருக்கிறது? ஏதோ கொஞ்சம் இருந்ததையும் தாங்கள் திருட்டுத்தனமாகக் கவர்ந்துகொண்டு விட்டீர்கள்!" என்று சொல்லிவிட்டு அவள் தன் முகத்தைத் திருப்பித் தனக்கு வந்த சிரிப்பை அடக்கிக்கொள்ள முயன்ருள்.

இந்த அபிநயத்தை ஸத்யேந்திரன் கவனிக்கவில்லை. ஆனுலும், "திருட்டுத்தனமாய்க் கவர்ந்தீர்கள்" என்ற சொற்களின் பொருள் தீவிரமான ஒளிரேகையைப்போல் பாய்ந்து, அவனுடைய சந்தேக இருளைத் திடீரென்று விலக்கி, அவன் ஹ்ருதயத்தில் ஒரு விதமான பிரகாசத்தை உண்டாக்க ஆரம்பித்தது. அச்சமயம் அந்த மரம் அடர்ந்த சாலையிலேயே அவள் பாதங்களில் விழுந்து விடுவோமா என்றுகூட அவன் மனம் எண்ணியது. ஆனுல் க்ஷண நேரத்தில் எழுந்த வெட்கம் அவன் பிரியதமையைத்

தலை நிமிர்ந்து பார்க்கக்கூட முடியாமற் செய்துவிட்டதோடு வாயையும் அடைத்துவிட்டது.

ரமணியின் உத்தரவுப்படியே வேலைக்காரி வீட்டு வாசற்படியில் நின்று வழிபார்த்துக் கொண்டிருந்தாள். இவர்களைக் கண்டதும் அவள் ரமணியின் அருகில் வந்து, "பாவம்! ஏன் இவனை நீ இந்த மாதிரி ஆட்டி வைக்கிறாய்? இவனிடம் ஏதாவது இருக்குமா? நான்கு பைஸாவாவது கிடைக்குமா?" என்றாள்.

பெண்மணி சிரித்துக்கொண்டே, "அது தெரியாது! ஆனால் இந்த மாதிரி முட்டாள்களைப் பைத்தியங்களாக்கிச் சுற்ற வைப்பதில் எனக்கு மிக்க சந்தோஷம்" என்றாள்.

வேலைக்காரி சிறிதுநேரம் நன்றாகச் சிரித்துவிட்டு, "உன்னால் இதுவும் முடியும்; இன்னும் எவ்வளவோ முடியும்! பார்ப்பதற்கு ராஜா வீட்டுப் பிள்ளைபோல் இருக்கிறான். எவ்வளவு அழகான முகம்! அப்படியே அவன் மேனியும். தவிர, உங்களிருவருக்கும் பொருத்தம் ரொம்பச் சேர்ந்திருக்கிறது. நீங்கள் இருவரும் சேர்ந்து நின்றதைப் பார்த்தபோது ஒரே கொத்தில் மலர்ந்த இரண்டு ரோஜாப் புஷ்பங்களைப் போலத் தோற்றியது" என்றாள்.

அழகி புன்சிரிப்புடன், "சரி! சரி! பிடிக்காவிட்டால் நீயும் பங்கிட்டுக் கொள்ளலாம்" என்றாள்.

ஆனால் வேலைக்காரியும் சளைத்தவள் அல்ல. அவள், "அக்கா! இந்தப் பொருளை நீ உயிருள்ளவரை கொடுக்க மாட்டாய். நான் இப்பொழுதே சொல்லி வைக்கிறேன்" என்று கூறினாள்.

 

[4]

‘நடக்கக் கூடாதவைகளைப் பார்த்துவிட்டால்கூட அதை யாரிடமும் சொல்லாதே’ என்பது ஞானிகளின் வாக்கு. ஏனென்றால் அஞ்ஞானிகள் அதை நம்ப மாட்டார்கள். இந்தக் குற்றத்திற்காகத்தான் ஸ்ரீமந்தன் கஷ்டப்பட வேண்டி நேர்ந்தது*. என்ன இருந்தாலும், இந்த விஷயம் முற்றும் வாஸ்தவமே. ஸத்யேந்திரன் வீடு வந்ததும் பைரனின் கவிதைகளைப் படித்து அவற்றில் ‘டான் ஜுவான்’ என்பதை வங்காளியில் மொழி பெயர்க்க ஆரம்பித்து விட்டான்.

---

* வங்காளக் கவி சிரேஷ்டரான ஸ்ரீ முகுந்தராம் சக்கரவர்த்தி என்பவர் எழுதிய நூல்களுள் ‘சண்டிகாவியம்’ என்பது மிகவும் பிரஸித்தி பெற்றது. அதில் ஸ்ரீமந்தன் என்ற ஒரு வியாபாரியின் கதை இருக்கிறது. ஒரு வியாபாரி வாணிக நிமித்தம் சிங்களத்திற்குப் போக விரும்பினான். அப்போது அவன் மனைவி நான்கு மாதம் கர்ப்பமா யிருந்தாள். போவதற்குமுன் அவன் தன் மனைவியிடம் தான் எந்தக் காரணத்தினாலோ ஒருகால் திரும்பி வராமலிருந்தால் அவள் கருவுயிர்க்கும் பிள்ளையையே தன்னைத் தேட அனுப்ப வேண்டுமென்று சொல்லிவிட்டுச் சென்றான். போகும் வழியில் கடலில் தாமரை மலரின்மீது ஒரு

'இவ்வளவு பெரிய கல்கத்தா நகரில், ராஜபாட்டை யிலும் நதிக்கரையிலும் இப்படி அதிசயிக்கத் தக்க இந்தப் பிரேமப்ரவாகம் எப்படிப் பெருக்கெடுக்க முடியும்? அந்தப் பிரவாகத்தின் ஊடே மூழ்கிச் செல்ல எதுவரை கூடும்?' என்ற சந்தேகங்களில் ஒன்றுமே அவன் மனத்தில் உதிக்கவில்லே.

இரண்டு நாட்களுக்குப் பிறகு இருவரும் ஸ்நானம் செய்துவிட்டுத் திரும்பி வந்துகொண்டிருந்தனர். அப்போது அந்த அழகி, "நேற்றிரவு நான் நாடகம் பார்க்கச் சென் றிருந்தேன். பாவம்! அந்த ஸரளாவின் துன்பத்தைக் கண்டு என் ஹ்ருதயமே வெடித்து விடும்போல் ஆகிவிட்டது" என்ருள்.

---

பெண் இருப்பதைப் பார்த்தான். அக்கரை அடைந்ததும் அவ்வூர் அரசனிடம் இதைத் தெரிவித்தான். அரசன் உடனே அப்பெண்ணைத் தனக்குக் காட்ட வேண்டுமென்று வணிகனைக் கேட்டுக்கொண்டான். வணிகன் அரசனை அழைத்துக்கொண்டு திரும்பிச் சென்று பார்க்க அங்கே அப்பெண் காணப்படவில்லே. உடனே அரசன் அவனைச் சிறையில் அடைத்துவிட்டான்.

இங்கே அவ்வியாபாரியின் மனைவி தனக்குப் பிறந்த பிள்ளைக்கு ஸ்ரீமந்தன் என்று பெயரிட்டு வளர்த்து வந்தாள். அவன் சிறு வயது முதலே சண்டி தேவியின் பக்தனுக விளங்கினுன். தன் தந்தையைத் தேடிக் கொண்டு சிங்களம் செல்லலானுன். வழியில் எவ்விதமான கெடுதல் வரினும் சண்டிகை ரக்ஷிப்பாள் என்ற நம்பிக்கை அவனுக்குப் பூரணமாக இருந்தது. அந்தத் தாமரைப் பெண்ணை அவனும் கண்டான்.

ஸத்யேந்திரன் ஸரளாவின் நாடகம் பார்த்ததே இல்லை. ஆனால் ஸ்வர்ணலதா என்றொரு புத்தகம் படித்திருந்தான். ஆகையால் அவன் மெதுவாக, “ஆமாம், பாவம்! அவள் அதிகமாகத்தான் கஷ்டப்பட்டாள்” என்றான்.

அவள் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுவிட்டு, “ஆஹா! அவளுக்கு எவ்வளவு பெரிய கஷ்டம் வந்தது! அவள் மட்டும் தன் காதலனை அவ்வளவு நேசித்தாளே; அது ஏன்? ஆனால் ‘ஓரகத்தி’ மட்டும் ஏன் நேசிக்கவில்லை?” என்று கேட்டாள்.

ஸத்யேந்திரன் சுருக்கமாக, “எல்லாம் அவர் அவர் பிறவிக்குணம்” என்றான்.

“ஆமாம், அதுதான். கல்யாணம் எல்லாருக்குந்தான்

---

சிங்களம் சென்றதும் அவன் அத்தாமரைப் பெண்ணைத் தன்னுடைய தந்தையும் பார்த்தாரென்றும், அவர் அரசனுக்குக் காட்டத் தவறியதற்காகச் சிறைப்பட்டிருக்கிறாரென்றும் அறிந்தான். பதினாறே வயதுள்ள பாலனாகிய ஸ்ரீமந்தன் தைரியமாய் அரசனிடம் சென்று தான் அப்பெண்ணை அவனுக்குக் காட்டுவதாகக் கூறி அழைத்துச் சென்றான். ஆனால் அவனும் அப்பெண்ணைக் காட்ட முடியாமல் மரண தண்டனை விதிக்கப் பெற்றான். கொலைக் களத்தில் கொலையாளிகள் தண்டனையை நிறைவேற்றும் போது சண்டிதேவி ஒரு கிழவனுடைய உருவத்தில் வந்து ஸ்ரீமந்தனைக் காப்பாற்றினாள். அரசன் சண்டிபக்தனின் பெருமையைக் கேட்டு மகிழ்ந்து அவன் தந்தையை விடுவித்துத் தன் பெண்ணையும் பாதி ராஜ்யத்தையும் அவனுக்குக் கொடுத்தான்.

ஆகிறது. இருந்தாலும் எல்லா ஸ்திரீ புருஷர்களும் தங்களுக்குள் பரஸ்பரம் காதல் கொள்ளுவதென்பது முடியுமா? 'காதல்' என்பது என்னவென்றே தாங்கள் சாகும்வரை வெகு பேர் அறிவதில்லை. மனிதர்களில் பலருக்குத் தங்கள் முன்னிலையில் ஆயிரம் நல்ல பாட்டுக்களைப் பாடினாலும் கூட அவற்றில் மனம் வைத்துக் கேட்க முடிவதில்லை. சிலர் எந்த விஷயத்திற்கும் கோபித்துக் கொள்ளுவதில்லை; அவர்களால் கோபித்துக் கொள்ளவும் முடிவதில்லை. ஜனங்கள் அவர்களைத்தான் புகழ்கிறார்கள்; ஆனால் என் மனம் அவர்களை நிந்திக்கவே விரும்புகிறது."

ஸத்யேந்திரன் சிறிது புன்னகையுடன், "ஏன்?" என்று கேட்டான்.

ரமணி விறுவிறுப்பான குரலில், "இதனாலேயே அவர்கள் மந்தஸ்வபாவம் உள்ளவர்களாகப் போய் விடுகிறார்கள். பொறுமையாக இருப்பதில் கொஞ்சம் நன்மை இருந்தாலும் அதில் பிழையே அதிகமாக இருக்கிறது. ஸரளாவின் மைத்துனர் தம் மனைவியினிடம் இவ்வளவு கொடுமைகளை அனுபவித்துங்கூட அவருக்குக் கோபமே வரவில்லை" என்றாள்.

ஸத்யேந்திரன் ஒன்றும் பதிலே கூறாமல் மௌனமாக இருந்தான். அவள் மீண்டும் பேச ஆரம்பித்து, "அவருடைய மனைவி பிரமதா இருக்கிறாளே, அவள்தான் எப்படிப்பட்ட பிசாசு! நானாயிருந்தால் அந்த ராக்ஷஸியின் கழுத்தை அப்படியே திருகி இருப்பேன்" என்றாள்.

ஸத்யேந்திரன் சிரித்துக்கொண்டே, "நீங்கள் எப்படிச் செய்வது? பிரமதரி என்று உண்மையாக ஒரு பெண் இருந்தால் தானே? இவை எல்லாம் கவிஞரின் கற்பனைகளல்லவா?" என்று சொன்னான்.

ரமணி இடைமறித்து, "கவிஞர் இம்மாதிரியாகக் கற்பனை எதற்காகச் செய்தார்? உண்மை! எல்லாருடைய அந்தக்கரணங்களிலும் கடவுள் இருக்கிறார்; ஆத்மா இருக்கிறது. ஆனால் பிரமதாவின் சரித்திரத்தைப் பார்க்கும் போது அவள் மனத்தில் கடவுள் என்று ஒருவர் இருப்ப தாகவே தெரியவில்லை என்றுதான் எல்லோரும் சொல்லுகிறார்கள். நான் உங்களிடம் உண்மையாகச் சொல்லுகிறேன்: பெரிய பெரிய எழுத்தாளர்களின் நூல்களைப் படித்துப் படித்து ஜனங்கள் நல்லவர்களாகட்டும்; ஒருவரை ஒருவர் நேசிக்கட்டும். அவைகளைப்பற்றி ஓர் ஆக்ஷேபணையுமில்லை. ஆனால் இம்மாதிரி ஒரு நூலை எழுதி வைத்தால் இதைப் படித்தவுடன் மனிதர்கள் தங்களுக்குள் வெறுப்புக் கொண்டு 'எல்லோர் ஹ்ருதயமும் கடவுளின் ஆலயம்' என்ற விஷயத்திலுள்ள நம்பிக்கையையும் இழந்து விடுவார்கள்" என்றாள்.

ஸத்யேந்திரன் ஆச்சரியத்துடன் அவளைப் பார்த்துக் கொண்டே, "நீங்கள் நிறையப் புத்தகங்கள் படித்திருக்கிறீர்கள் என்று நினைக்கிறேன்" என்றான்.

"ஆமாம்! இங்கிலீஷ் மட்டும் தெரியாது. ஆனால் வங்காளியில் எவ்வளவு புத்தகங்கள் வெளிவந்துள்ளனவோ அவ்வளவையும் படித்திருக்கிறேன். சிலசமயம் இரவு முழுதும்கூடப் படித்துக்கொண்டிருப்பேன். இது தான் பெரிய சாலை. வாருங்கள். எங்கள் வீட்டில் எவ்வளவு புத்தகங்கள் இருக்கின்றன என்று வந்து பாருங்கள்" என்று அழைத்தாள்.

ஸத்யேந்திரன் திடுக்கிட்டு, "உங்கள் வீட்டிலா?" என்றான்.

"ஆமாம், எங்கள் வீட்டில்தான்! வாருங்கள்! நீங்கள் வரத்தான் வேண்டும்."

உடனே ஸத்யேந்திரனின் முகம் பயத்தினுல் வெளுத்து விட்டது. அவன் பயந்துகொண்டு, "இல்லை, இல்லை! சிச்சீ!......"

"சீ! தோ! ஒன்றும் இல்லை. வாருங்கள்."

"இல்லை! இல்லை! இன்று வேண்டாம்! இன்று போகட்டும்!" என்று சொல்லிக்கொண்டே ஸத்யேந்திரன் நடுங்கிக்கொண்டிருக்கும் கால்கள் தள்ளாட வேகமாகச் சென்ருன். அன்று அந்தப் பரிசயமற்ற காதலியிடம் அவனுக்கு ஒரு மரியாதை ஏற்பட்டுவிட்டது. அதனுல் அவனுடைய ஹ்ருதயமும் கனத்துவிட்டது.

 

## [5]

காலையில் கங்காஸ்நானம் செய்துவிட்டு ஸத்யேந்திரன் மெள்ளத் தன் வீட்டுக்கு வந்துகொண்டிருந்தான். அவனுடைய பார்வையில் வருத்தமும் சோகமும் நிரம்பி, விழிகள் ஈரமாகவே இருந்தன. அன்றோடு நான்கு நாட்கள் ஆகிவிட்டன. காதலியைக் காணவில்லை. அப்பொழுது அவள் கங்காஸ்நானம் செய்ய வருவதும் இல்லை.

இத்தனை நாளாக அவன் அவளைப்பற்றி ஆகாயத்திற்கும் பூமிக்கும் ஈடுகட்டி எவ்வளவு மனோராஜ்யம் செய்திருப்பான்! அதற்கு எல்லையேயில்லை. அவள் இவ்வுலகிலேயே இல்லையோ, அல்லது நோயினால் மரணாவஸ்தையில் இருக்கிறாளோ என்ற சந்தேகங்களும் ஏற்பட்டன. அவளுக்கு என்ன ஏற்பட்டுவிட்டதென்பதை அவனால் அறிய முடியவில்லை.

அவனுக்கு அவள் வசித்து வந்த அந்தத் தெருமட்டுந்தான் தெரியும். ஆனால் அதைத் தவிர, எந்த வீடு, அது எங்கே யிருக்கிறது என்ற விஷயங்களில் ஒன்றும் அவனுக்குத் தெரியாது.

"நான் ஏன் அன்று அவளோடு சென்று அவள் வீட்டைப் பாராமல் வந்தேன்? அவள் எவ்வளவோ வற்புறுத்தியும் ஏன் மறுத்தேன்?" இவ்வாறு எண்ணி

அவன் மனம் பச்சாத்தாபத்தால் புழுங்கியது. உண்மையாகவே அவன் அவளேக் காதலித்தான். வெறும் கண்ணுல் பார்த்து ரூபத்தில் மயங்கிய மயக்கம் மட்டுமல்ல. உள்ளத்தில் ஆழ்ந்த காதலின் தாகம் ஏற்பட்டிருந்தது. அதில் வஞ்சனேயோ, பொய்யின் சாயையோ துளிக்கூடக் கிடையாது.

"பாபுஜி!"

ஸத்யேந்திரன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். அப்பெண்ணுடன் வழக்கமாக வரும் அதே வேலைக்காரி பாதையோரத்தில் நின்றுகொண்டிருந்தாள். ஸத்யேந்திரன் திகிலுடன் வேகமாக அவளருகில் சென்று அடைத்துக் கொள்ளும் தொண்டையுடன், "அவர்களுக்கு என்ன ஆய்விட்டது?" என்று கேட்டான். அவனுல் சமாளித்துக்கொள்ள முடியவில்லை; இருந்தாலும் எப்படியோ நிதானித்துக்கொண்டான். வேலைக்காரி தலையைக் குனிந்து வந்த சிரிப்பை அடக்கிக்கொண்டாள். எங்கே தன்னேயும் அறியாமல் அவனுக்கு எதிரில் சிரிப்பு வந்து விடப் போகிறதோ என்ற பயத்திஞல் தலையைக் குனிந்து கொண்டே, "அவர்களுக்கு உடம்பு மிகவும் மோசமாக இருக்கிறது. தங்களேப் பார்க்க விரும்புகிருர்கள்" என்ருள்.

"சரி, போகலாம்" என்று சொல்லி ஸத்யேந்திரன் கண்ணீரைத் துடைத்துக்கொண்டே செல்லலாஞன்.

சிறிதுதூரம் சென்றவுடன் அவன் வேலைக்காரியிடம், "என்ன உடம்பு? ஜாஸ்தியாக இருக்கிறதா?" என்று கேட்டான்.

"இல்லே. அப்படிப் பெரியீ நோய் ஒன்றுமில்லே. ஆனுல், ஜ்வரம் கொஞ்சம் கடுமையாகத்தான் இருக்கிறது" என்று பதில் கூறிஞள் வேலைக்காரி.

ஸத்யேந்திரன் மனத்துக்குள்ளேயே கடவுளை வேண்டிக்கொண்டு வேறு ஒன்றும் பேசாமல் அந்தப் பெண்ணின் வீட்டை அடைந்தான். வீடு பெரிதாகத்தான் இருந்தது. வாசலில் ஒரு ஹிந்துஸ்தானி காவற்காரன் உட்கார்ந்தபடியே தூங்கிக்கொண்டிருந்தான். வேலைக்காரியிடம், "நான் வருவதால் அவள் தந்தை கோபித்துக் கொள்ள மாட்டாரே? அவருக்கும் என்னைத் தெரியாது" என்று சொன்னான்.

"அவளுக்குத் தந்தையில்லை; தாயார் மாத்திரந்தான் இருக்கிறாள். ஆனால் அவளைப் போலவே அவளுடைய தாயாரும் தங்களிடம் மிக்க அன்பு பாராட்டுகிறார்கள்" என்றாள் வேலைக்காரி.

ஸத்யேந்திரன் மௌனமாக அந்த வீட்டினுள் நுழைந்தான். படியேறி மூன்றாவது மாடித் தாழ்வாரத்திற்குச் சென்று பார்த்தான். அடுத்தடுத்து மூன்று அறைகள் இருந்தன. வெளியே இருந்து பார்த்தாலே அவை நன்கு அலங்கரிக்கப்பட்டு விளங்கியது தெரிந்தது. சாப்பாட்டு அறையிலிருந்து உரக்கச் சிரிக்கும் சப்தத்துடன், தபேலா, காற்சதங்கை முதலியவைகளும் கேட்டன. வேலைக்காரி அந்தப்புறம் கையைக் காட்டி, "இதே அறைதான்; உள்ளே செல்லுங்கள்" என்று சொல்லி முன்னே சென்று வாசற்படியின் முன் தொங்கும் படுதாவைச் சற்று கையினால் தள்ளி உரத்த குரலில், "அக்கா, இதோ உன் நாகரிகக் காதலர்" என்றாள்.

அறையில் சப்தமும் குதூகலமும் அதிகரித்தன. அங்கே இருந்த காட்சிகளைக் கண்டதும் ஸத்யேந்திரன் தலை சுழல ஆரம்பித்துவிட்டது. மூர்ச்சித்துக் கீழே விழுந்து விடுவோமோ என்ற ஓர் உணர்ச்சி அவனுக்கு ஏற்பட்டது.

எப்படியோ வாசற்படியைப் பிடித்துக்கொண்டு கண்களை மூடி அங்கேயே உட்கார்ந்துவிட்டான்.

அவ்வறையில் தரையின்மீது உயர்ந்த மெத்தை விரிக்கப்பட்டிருந்தது. பார்ப்பதற்குப் பெரிய மனிதர்கள்போல் காணப்பட்ட இரண்டு மூன்று பேர் அதில் அமர்ந்திருந்தனர். ஒருவனிடம் ஹார்மோனியமும் மற்றொருவனிடம் தபேலாவும் இருந்தன. ஒருவன் ஆனந்தமாகக் குடித்துக்கொண்டிருந்தான். யுவதி நடனம் ஆடிக்கொண்டிருந்தாள். அவள் இருகால்களிலும் சதங்கை அணிந்திருந்தாள். உடல் முழுதும் நானாவிதமான ஆபரணங்களை அணிந்து அலங்கரித்துக்கொண்டிருந்தாள். மது மயக்கத்தால் சிவந்த அவளுடைய விழிகள் சுழன்றுகொண்டிருந்தன.

ஸத்யேந்திரனைக் கண்டதும் அவள் சட்டென்று அருகில் வந்து அவன் கைகளைப் பற்றிக் கலகலவென்று நகைத்துக்கொண்டே, "அடே யப்பா! உங்களுக்கு மூர்ச்சைவியாதி ஒன்றுமில்லையே? ஐயா! போதும், விளையாட்டையெல்லாம் நிறுத்துங்கள்; எழுந்திருங்கள்" என்றாள்.

சேதனமற்ற மனிதர்கள் பெரும் வேகமுள்ள ஸ்பரிசத்தால் எப்படி நடுங்குவார்களோ அப்படியே அந்த யுவதியின் ஸ்பரிசத்தால் ஸத்யேந்திரனின் தேகம் முழுதும் நடுங்கியது.

"என் பெயர் ஸ்ரீமதி பிஜ்லி. உங்கள் பெயர் என்ன? புத்துவா—சுத்துவா?" என்று கேட்டாள் அவ்வழகி.

இதைக் கேட்டதும் எல்லோரும் கலகலவென்று உரக்கச் சிரிக்கலாயினர். வேலைக்காரியும் சிரித்துக்

கொண்டு கீழே படுத்தபடியே, "பேஷ் அக்கா! நீ நன்ருக விளையாடக் கற்றுக்கொண்டிருக்கிருயே" என்ருள்.

பிஜ்லி மாய்மாலக் கோபத்துடன் முகத்தைச் சிணுங்கி, "பேசாமலிரு; அதிகப் பேச்சு வேண்டாம்" என்று சொல்லிவிட்டு ஸத்யேந்திரனிடம், "வாருங்கள். இங்கே வந்து உட்காருங்கள்" என்று சொல்லிக்கொண்டே அவனை வேகமாக இழுத்து வந்து ஒரு நாற்காலியில் உட்கார வைத்துத் தானும் அவன் காலடியில் மண்டியிட்டு உட்கார்ந்தாள்.

அவள் கைகுவித்து, "காதலரின் முகமதியைப் பார்த்ததும், ஏ ரஜனி, இன்று நமக்குப் பாக்யம் உதயமாய் விட்டது. அவருடைய பூர்ண கிருபை ஏற்பட்டுவிட்டதால் நான் என்னுடைய யௌவனப் பருவத்தின் பலனைப் பெற்றவளானேன். இன்றே என் வீடு வீடாயிற்று. என் தேகம் தேகமாயிற்று. என் அதிர்ஷ்டம் ஸந்தேகமின்றி என்னைக் கடைக்கணித்து விட்டது. பஞ்சபாணன் என் மேல் இப்பொழுது லக்ஷக்கணக்கான பாணங்களைப் பொழிகின்ருன். தென்றலும் மந்தஹாஸத்துடன் வீசுகின்றது. அவர் என்னைவிட்டுத் திரும்பிப் போகாமலிருந்தால் அதுவே என்னுடைய உண்மையான வாழ்க்கையாகும்" என்ற கருத்தடங்கிய பாடலைப் பாடினுள்.

சாராயங் குடித்துக்கொண்டிருந்த அந்த மனிதன் எழுந்திருந்து ஸத்யேந்திரனிடம் வந்து சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்தான். தன் போதை மயக்கத்துடன் அழுதுகொண்டே, "மஹராஜ்! நான் மஹா பாதகன். எனக்குத் தங்கள் பாததூளி கூட......" என்று வேண்டினுன். ஆனுல் அவனுல் அந்த வாக்கியத்தைப் பூர்த்தி செய்ய முடியவில்லை.

துரதிர்ஷ்டவசமாக ஸத்யன் அன்று ஸ்நானம்செய்து விட்டு ஒரு பட்டைக் கட்டிக்கொண்டிருந்தான்.

ஹார்மோனியம் வாசித்துக் கொண்டிருந்தவன்மட்டும் நல்ல நினைவுடன் இருந்தான். அவன் கொஞ்சம் அனுதாபத்துடன் பிஜ்லியை நோக்கி, "பாவம்! ஏன் அவனை வீணாக வேடிக்கை செய்துகொண்டிருக்கிறாய்?" என்று கேட்டான்.

பிஜ்லி சிரித்துக்கொண்டே, "பேஷ்! வீணாகவா? இது உண்மையாகவே வேடிக்கைதான். இந்த உல்லாஸமான தினத்தில் நீங்கள் வேடிக்கை பார்ப்பதற்காகவே இப்படிச் செய்திருக்கிறேன். நல்லது புத்து, உங்கள் தலைமேலும் என் தலைமேலும் ஆணை! உண்மையாகச் சொல்லுங்கள்: நீங்கள் என்னை எப்படி எண்ணினீர்கள்? நானோ தினமும் கங்கா ஸ்நானம் செய்துவருகிறேன்; ஆதலால் நான் பிரம்மஸமாஜி அல்ல; முஸல்மான் பெண்ணுமல்ல; கிறிஸ்தவப் பெண்ணுமல்ல. ஆனால் ஹிந்துக் குடும்பத்தில் பிறந்து இவ்வளவு வயதான என்னைக் கண்டு நான் ஒரு ஸுமங்கலி அல்லது அமங்கலி என்று ஏதேனும் ஒருவிதமாக நீங்கள் நிச்சயித்திருக்க வேண்டும். இருக்கட்டும். நீங்கள் என்ன எண்ணத்துடன் என்னைக் காதலித்தீர்கள்? சொல்லுங்கள். என்னைக் கல்யாணம் செய்து கொள்ளலாமென்றா? இல்லை, எங்கேயாவது இழுத்துக்கொண்டு போய்விடலாமென்றா?" என்றாள்.

மறுபடியும் ஒரு பெரிய கலகலப்பு. எல்லோரும் சேர்ந்து என்ன என்னவோ பேசிக்கொண்டார்கள். ஸத்யேந்திரன் தலை நிமிரவேயில்லை. எந்தவிதமான பதிலும் கூறவில்லை. தன் மனத்திற்குள் என்ன

எண்ணிஞனே எப்படி அதை வெளியிட முடியும்? இல்லே, வெளியிட்டால்தான் கேட்பவர்கள் யார்?

பிஜ்லி சடடென்று எழுந்து நின்று, "பேஷ்! நல்ல காரியம் செய்தேன். ஏ சியாமா, சீக்கிரம்போய், பாபுஜிக்கு ஏதேனும் சிற்றுண்டி கொண்டுவா. பாவம்! ஸ்நானம் செய்துவிட்டு வந்திருக்கிருர். நான் இதுவரையில் விளே யாட்டிலேயே கவனமா யிருந்துவிட்டேன்" என்ருள். முதல் இருந்த கேலி, பரிஹாஸம் இவை நிறைந்திருந்த அவள் குரல் கொஞ்சம் கொஞ்சமாக அன்பு நிறைந்து குறும்பற்ற அநுதாபத்தால் உண்மையாகவே சாந்தமடைந்துவிட்டது.

சிறிது நேரத்திற்குள் வேலேக்காரி ஒரு தட்டில் சிற்றுண்டிகளே வைத்து எடுத்து வந்து நின்ருள். பிஜ்லி அதைத் தன் கையில் வாங்கி ஸத்யேந்திரன் முன் மண்டி யிட்டு உட்கார்ந்து, "நல்லது, தலேயைத் தூக்குங்கள். கொஞ்சம் எடுத்துச் சாப்பிடுங்கள்" என்ருள். ஸத்யேந் திரன் அதுவரையில் தன் சக்தி முழுவதையும் சேர்த்துச் சமாளித்துக்கொண்டிருந்தான். இதைக் கேட்டதும் அவன் தலே நிமிர்ந்து சாந்தமாய், "நான் சாப்பிட வில்லே" என்ருன்.

"ஏன்? ஜாதிஹீனம் ஏற்படுமா? நான் என்ன தோட்டிச்சியா? சக்கிலியச்சியா?" என்று கேட்டாள் பிஜ்லி.

ஸத்யன் அதே சாந்த ஸ்வபாவத்துடன், "அப்படி இருந்தாலும் நான் சாப்பிட்டிருப்பேன். ஆனல் நீங்கள் யாரோ? அது......"

பிஜ்லி கலகலவென்று சிரித்துக்கொண்டே, "புத்து பாபுகூடக் கத்தி கட்டாரி வீசக் கற்றுக்கொண்டிருக்கிருர்

போல் இருக்கிறதே" என்று கூறிவிட்டு மீண்டும் சிரிக்க லானுள். ஆனல் அந்தச் சிரிப்பில் வெறும் சப்தந்தான் இருந்ததே யல்லாது உயிரே இல்லை. அவளோடு வேறு யாரும் சேர்ந்து சிரிக்கவில்லை.

"என் பெயர் ஸத்யன்; புத்துவல்ல. நான் கத்தி கட்டாரி வீச ஒருபொழுதும் கற்றுக்கொள்ளவில்லை. ஆனல் நான் செய்த பிழைகளைத் திருத்திக் கொள்ளமட்டும் கற்றுக்கொண்டிருக்கிறேன்."

பிஜ்லி சட்டென்று ஏதோ சொல்ல விரும்பியவள் அதைத் தன் வாய்க்குள்ளேயே அடக்கிக்கொண்டு, "நான் தொட்டதை நீங்கள் சாப்பிடமாட்டீர்களா?" என்ருள்.

"மாட்டேன்."

பிஜ்லி எழுந்து நின்ருள். அவளுடைய பரிகாசக் குரல் இப்பொழுது கொஞ்சம் கடுமை அடைந்தது. அவள் வேக மாக, "நீங்கள் கட்டாயம் சாப்பிடுவீர்கள். நான் சொல்லு கிறேன். இன்று இல்லாவிட்டால் நாளை. நாளை இல்லா விட்டால் இரண்டு நாட்களுக்குப் பிறகு சாப்பிடுவீர்கள்; நிச்சயம்" என்று கூறினுள்.

ஸத்யேந்திரன் தலையை ஆட்டிக்கொண்டே, "தவறு என்பது எல்லோருக்கும் ஏற்படுகின்றது. ஆனல் என் தவறு எவ்வளவு பெரியதென்பதை யாவரும் அறிவார்கள். தாங்களும் தவறு இழைத்திருக்கிறீர்கள். உண்மையாகச் சொல்லுகிறேன். இன்றில்லை, நாளையில்லை, நான்குநாள் கழித்துமில்லை; இந்த ஜன்மத்திலுமில்லை, அடுத்த ஜன் மத்திலுமில்லை. தாங்கள் தொட்டதை நான் சாப்பிடமாட் டேன். இதை நன்ருக அறிந்து கொள்ளுங்கள். சரி, எனக்கு உத்தரவு கொடுங்கள். நான் போகவேண்டும்.

உங்கள் சுவாஸம் பட்டாலே என் இரத்தம் கொதிக்கிறது" என்ருன்.

சாராயம் குடித்துக்கொண்டிருந்தவன் ஆடி வழிந்து கொண்டிருந்த முகத்துடனும் அரைக்கண் பார்வையுடனும் தலையைத் தூக்கி, "பிஜ்லி பீபீ! அவன் போகட்டும், அவன் போகட்டும். காலை வேளையில் வந்து சந்தோஷத்தைக் கெடுக்கிருன்" என்ருன்.

பிஜ்லி ஒரு பதிலும் சொல்லாமல் ஸ்தம்பித்துப் போய் ஸத்யன் முகத்தையே பார்த்து நின்று கொண்டிருந்தாள். உண்மையாகவே அவள் பெரிய தவறு இழைத்துவிட்டாள். இவ்வளவு சாந்த முகமுள்ள மனிதன் இம்மாதிரிப் பேசுவான் என்று அவள் சிறிதும் எண்ணவில்லை.

ஸத்யேந்திரன் எழுந்து நின்ருன். பிஜ்லி இனிய குரலில், "இன்னும் சற்றுநேரம் உட்கார்ந்திருங்கள்" என்று வேண்டினுள்.

இதைக் கேட்டதும் அக்குடியன், "ஊஹூம்! அவனைக் கெஞ்சினுயோ இன்னும் சற்றுப் பிகு காண்பிப்பான். இப்பொழுது அவன் போகட்டும். வேகம் தணியட்டும்" என்ருன். ஸத்யேந்திரன் அறையை விட்டு வெளியே வந்ததும் பிஜ்லி அவன் பின்னுலேயே வந்து வழியை மறைத்துக்கொண்டு மெதுவாக, "அவர்கள் இருக்கிருர்கள். இல்லாவிட்டால், நான் அப்பொழுதே கைகுவித்து 'நான் பெரும்பிழை செய்து விட்டேன்' என்று கூறி மன்னிப்புக் கேட்டிருப்பேன்" என்று சொன்னுள்.

ஸத்யேந்திரன் பதில் ஒன்றும் சொல்லாமல் தலையைத் திருப்பிக்கொண்டான்.

பிஜ்லி மீண்டும், "பக்கத்திலுள்ள அறை நான் படிக்கும் அறை. கொஞ்சம் வந்து அதைப் பார்க்க மாட்டீர்களா? உள்ளே வந்து ஒருமுறை பார்த்துவிட்டு வாருங்கள். நான் உங்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுகிறேன்" என்று கெஞ்சினுள்.

"முடியாது" என்று சொல்லிப் படிக்கட்டை நோக்கி நடந்தான் ஸத்யேந்திரன். பிஜ்லி அவனைத் தொடர்ந்து சென்று, "நாளைக்குச் சந்திக்க முடியுமா?" என்று கேட்டாள்.

"முடியாது."

"இனி ஒருபொழுதும் சந்திக்க முடியாதா?"

"முடியாது."

பிஜ்லிக்கு அழுகை தொண்டையை அடைத்துக் கொண்டது. உமிழ்நீரை விழுங்கி வேகமாகத் தொண்டையைச் சரிப்படுத்திக்கொண்டு, "இனிச் சந்திப்பே ஏற்படாதென்பதில் எனக்கு நம்பிக்கை இல்லை. என்னுடைய வார்த்தையை நம்பமாட்டீர்களா?" என்ருள்.

அவளுடைய இரக்கம் தரும் சொற்களைக் கேட்டு ஸத்யேந்திரன் ஆச்சரியப்பட்டான். ஆனல் இந்தப் பதினைந்து பதினறு நாட்களாக அவன் பார்த்த அபிநயங்களின் முன் இவை எம்மாத்திரம்? இருந்தாலும் அவன் தன் முகத்தை அவள்பக்கம் திருப்பி நின்ருன். அவனுடைய முகத்தின் ஒவ்வொரு ரேகையிலும் அவநம்பிக்கையின் சின்னங்களைப் பார்த்துப் பிஜ்லியின் உள்ளம் வெடித்தது. ஆயினும் என்ன செய்ய முடியும்? அந்தோ! நம்பிக்கை தரக்கூடிய எல்லா உபாயங்களையும் ஒரு கணத்தில் தூசி போல் உதறிவிட்டானே!

"எந்த வார்த்தையை நம்ப வேண்டும்?"

பிஜ்லியின் உதடுகள்மட்டும் விரிந்தனவேயன்றி அவற்றினின்றும் சிறிய சப்தமும் வெளிவரவில்லை. கண்ணீர் நிறைந்திருந்த தன் கண்களை ஒருமுறை மேலே தூக்கி மீண்டும் கீழே குனிந்துகொண்டாள். ஸத்யேந்திரனும் இதைக் கவனித்தான். ஏன்? போலி, மாய்மாலக் கண்ணீராக இருக்கக் கூடாதா? ஸத்யன் பதிலை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறான் என்பதைப் பிஜ்லி தலைநிமிராமலே அறிந்தாள். ஆனால் உள்ளத்தில் அடைபட்டு வெளிவரத் துடிக்கும் அந்த வார்த்தையைத் தன் நாவினால் உரைக்க அவள் எவ்வளவு முயன்றும் முடியவில்லை.

அவள் அவனைக் காதலித்தாள். எப்படி? அக்காதலின் ஒவ்வோர் அணுவினாலும் தான் நன்மையடையலாமென்ற ஆசையுடன். கூடுமானால் தன் அழகுக் களஞ்சியம், சரீரம், இவற்றைக்கூட அழுக்கு வஸ்திரத்தைப்போல் தியாகம் செய்யவும் அவளால் முடியும். ஆனால் அவளை யார் நம்புவார்கள்? அவள் வடுப்பட்டவள். தன் சரீரம் முழுதும் இழிசெயல்களின் கோடிக்கணக்கான சின்னங்கள் நிறைந்திருக்கும்போது தன்னை ஆராய்பவன் முன் நின்று இப்படிப்பட்ட சொற்களால் தவறு இழைப்பதுதான் அவளுடைய வாழ்க்கையா? ஆயினும் இத்தடவை அவள் தோஷமற்றவள் ஆவாளோ? நாழியாக ஆக அவளுக்கு அந்த விமரிசகன் தனக்குத் தூக்குத் தண்டனைகூட விதிப்பானோ என்ற எண்ணமும் உண்டாயிற்று. ஆனால் அவள் அதை எப்படித் தடுப்பது?

ஸத்யேந்திரன் தைரியம் இழந்தவன் ஆதலால், "நான் சென்று வருகிறேன்" என்றான்.

பிஜ்லியால் தலை நிமிரவே முடியவில்லை. ஆனால் வாயி லிருந்துமட்டும், "சரி, என் உச்சந்தலைமுதல் உள்ளங் கால்வரை நான் குற்றமுடையவளாக இருந்தாலும் எந்த விஷயத்தில் நம்பிக்கை வைத்திருந்தேனோ அதில் நீங்கள் அவநம்பிக்கை கொண்டு குற்றவாளி ஆகாதீர்கள். எல்லோருடைய ஹ்ருதயத்திலும் கடவுளிருக்கிறார் என் பதையும், யமன் வரும்வரை கடவுள் அவர்களை விட்டுச் செல்ல மாட்டார் என்பதையும் நம்புங்கள்" என்ற சொற்கள் வெளிவந்தன.

பிறகு சிறிதுநேரம் மௌனமாக இருந்துவிட்டு, "கோயிலிலிருக்கும் எல்லா விக்ரஹங்களுக்கும் பூஜை நடப்பதில்லை; ஆனாலும் அவற்றில் இருப்பவை தேவதை கள்தாம். அவற்றைப் பார்த்துத் தலைவணங்காமல் வேண்டு மானால் போகலாம்; ஆனால் காலால் உதைத்துவிட்டுப் போகக்கூடாது" என்று கூறிக் காலடிச் சப்தங்கேட்டுத் தலை நிமிர்ந்து பார்க்கவே ஸத்யேந்திரன் சென்றுகொண் டிருந்ததைக் கண்டாள். ஸ்வபாவத்தை விரோதமாக மாற்ற முடியும்; ஆனால் அதை அடியோடு அழித்து விடுவதென்பது முடியாத காரியம். ஸ்திரீகள் சரீரத்தில் பலவிதக் கொடுமைகள் இழைக்க முடியும்; ஆனால் பெண்மையை ஒப்புக்கொள்ளாமல் இருக்க முடியாது. பிஜ்லி நாட்டியக்காரி; ஆயினும் அவள் பெண்தானே? தன் வாழ்நாள் முழுதும் ஆயிரம் பிழைகளைச் செய்து அபராதி யாக இருந்தபோதிலும் அவள் பெண்தானே?

சிறிதுநேரத்திற்குப் பிறகு அவள் தன் அறைக்குத் திரும்பி வந்தபோது அவளுடைய வெறுக்கப்பட்ட, பாதி மடிந்த, பெண்மையின் இயற்கை அமிருத ஸ்பரிசத்தால் உயிர்பெற்றது. இந்தச் சிறிது நேரத்திற்குள் அவள்

உடலில் ஏற்பட்ட அற்புதமான மாறுதல் அந்தக் குடிகார னுக்குக்கூடத் தெரிந்துவிட்டது. அவன் கடைசியில் வாய் விட்டு, "உன் கண்ணிமைகள் நனேந்திருக்கின்றனவே? அம் மாடி! அந்தப் பையன் எவ்வளவு முரடன்? இவ்வளவு அருமையான பக்ஷியங்களேக்கூட அவன் வாயில் போட்டுக் கொள்ளவில்லேயே? நல்லது, தட்டை இங்கே நகர்த்து" என்று கூறிக்கொண்டே தானே அச்சிற்றுண்டித் தட்டை இழுத்து வைத்துக்கொண்டு அதைக் காலி செய்யலானுன்.

அவனுடைய வார்த்தைகள் ஒன்றும் பிஜ்லியின் காதில் விழவில்லே. அகஸ்மாத்தாக அவள் பார்வை அவளுடைய பாதங்களின்மேல் விழுந்தது. அவள் அணிந்திருக்கும் சதங்கைகள் அவற்றில் தேள் கொட்டுவதுபோன்ற ஓர் உணர்ச்சியை அவளுக்குக் கொடுத்தன. உடனே மளமள வென்று அவள் அவற்றை அவிழ்த்து எறிந்துவிட்டாள்.

"சதங்கையை அவிழ்த்தெறிந்து விட்டாயா?" என்று கேட்டான் ஒருவன்.

பிஜ்லி தலேநிமிர்ந்து புன்சிரிப்புடன், "ஆமாம், இனி இவைகளே நான் அணியமாட்டேன்" என்ருள்.

"இதன் உட்கருத்து என்ன?"

"உட்கருத்து இதுதான்: பாயிஜி இறந்துவிட்டாள்."

மிட்டாய் சாப்பிட்டுக் கொண்டிருந்த அக்குடிகாரன். "திடீரென்று உனக்கு என்ன வந்துவிட்டது?" என்று கேட்டான்.

பிஜ்லிக்குச் சிரிப்பு வந்துவிட்டது. ஆனுல் இதுவும் முன்போல் அதே ஜீவனற்ற சிரிப்புத்தான். அவள் சிரித்

துக்கொண்டே, "எந்த நோய் (ஒளி) தீபத்தை ஏற்றி அந்தகாரத்தை ஒழிக்கிறதோ, சூரியன் உதயமானதும் எப்படி இருள் சூழ்ந்த இரவு மடிகிறதோ, அதேபோல அந்த நோயினால் உங்கள் பாயிஜி அடியோடு அழிந்து விட்டாள்" என்றாள்.





## [6]

நான்கு வருஷங்களுக்குப்பின் நடந்த செய்தி. கல்கத்தாவில் ஓர் உன்னதமான வீட்டில் ஒரு பெரிய ஜமீன்தாரின் புத்திரனுக்கு அன்னப்பிராசன வைபவம். சமையல் சாப்பாடுகளெல்லாம் முடிந்தன. மாலையில் வீட்டின் முன்புறமுள்ள பெரிய ஹாலில் கச்சேரிகள் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. பலவிதமான மணமுள்ள வாசனைகள் கமழ ஆடல் பாடல்கள் நடந்தன.

ஒருபுறம் ஆடவும் பாடவும் வந்திருந்த மூன்று நான்கு நாட்டியப் பெண்கள் உட்கார்ந்திருந்தனர். இரண்டாவது மாடித் தாழ்வாரத்தில் திரை மறைவில் ராதாராணி தனியாக உட்கார்ந்துகொண்டு கீழே வந்திருந்த ஜனங்களைப் பார்த்துக்கொண்டிருந்தாள். அழைக்கப்பட்டிருந்த ஸ்திரீகள் யாவரும் இன்னும் வந்து சேரவில்லை.

அப்போது ஸத்யேந்திரன் பேசாமல் அவளுக்குப் பின்புறமாக வந்து நின்று மெள்ள, "இவ்வளவு குறிப்பாக எதைப் பார்த்துக் கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டான்.

ராதாராணி தன் கணவின் முகத்தைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே, "அவளைத்தான்; எல்லோரும் பார்க்க வந்திருக்கிறார்களே, அவளை. அதோ வந்திருக்கும் அப்

பெண்ணின் அலங்காரத்தைப் பார்த்துக்கொண்டிருக் கிறேன். இருக்கட்டும்; நீங்கள் இங்கு எங்கே திடீரென்று வந்தீர்கள்?" என்ருள். ஸத்யேந்திரன் சிரித்துக் கொண்டே, "நீ இங்கே தனியாக உட்கார்ந்திருக்கிருயே, உன்னிடம் ஏதாவது பேசிக்கொண்டிருக்கலாம் என்று தான் வந்தேன்" என்று பதில் சொன்னுன்.

"சரி, சரி, போங்கள்."

"உண்மையாகத்தான். அது இருக்கட்டும்; இங்கே வந்திருக்கும் இவர்களில் உனக்கு யாரைப் பிடித்திருக் கிறது, சொல்."

"அதோ அவளை" என்று எல்லோருக்கும் பின்னுல் சாதாரணமான அலங்காரத்துடன் அமர்ந்திருக்கும் பெண் ணைத் தன் விரலால் சுட்டிக் காட்டினுள் ராதாராணி.

"அவளா? இளைத்துப்போய் நோயாளியைப் போல் அல்லவா இருக்கிருள்?"

"இருக்கலாம்; ஆனுல் அவளே அவர்கள் யாவ ரிலும் அழகி. பாவம்! அவள் ஏழைபோல் தோன்றுகிறது. அவள் உடம்பில் நகைகளே இல்லையே."

ஸத்யேந்திரன் தலையை ஆட்டிக்கொண்டே, "இருக்க லாம். ஆனுல் அவளுக்கு எத்தனை ரூபாய் தெரியுமா?" என்று கேட்டான்.

"தெரியாது."

ஸத்யேந்திரன் மற்ற இருவரையுங் காட்டி, "இவர்க ளிருவருக்கும் முப்பது முப்பது ரூபாய்; மற்றவளுக்கு ஐம்பது ரூபாய்; நீ ஏழை என்று சொன்னுயே அவளுக்கு இருநூறு ரூபாய்" என்ருன்.

ராதாராணி ஆச்சரியமடைந்து, "இருநூறு? மிகவும் நன்றாகப் பாடுவாளா?" என்றாள்.

"பாடி நான் ஒருபொழுதும் கேட்டதில்லை. நாலைந்து வருஷங்களுக்கு முன்னர் நன்றாகப் பாடியதாகத்தான் ஜனங்கள் சொல்லிக் கொள்ளுகிறார்கள். இப்பொழுது நன்றாகப் பாடுவாளோ, இல்லையோ, சொல்ல முடியாது."

"அப்படியானால் இவ்வளவு ரூபாய் கொடுத்து எதற்காக அழைத்து வந்தீர்கள்?"

"இதற்குக் குறைந்து அவள் வருவதில்லையாம். இதற்குக்கூட அவள் வரச் சம்மதப்படவில்லை. மிகவும் வேண்டி அழைத்து வரவேண்டியிருந்தது."

ராதாராணி பின்னும் அதிக ஆச்சரியத்துடன், "ரூபாயும் கொடுத்து வேண்டிக்கொள்ள வேறு வேண்டுமா?" என்றாள்.

ஸத்யன் அருகிலிருந்த நாற்காலியை இழுத்துப்போட்டு அதில் உட்கார்ந்துகொண்டு, "முதலாவது: அவள் இந்தத் தொழிலையே விட்டுவிட்டாள். அவளிடம் எவ்வளவு வித்தைதான் இருக்கட்டுமே; யாரும் இவ்வளவு ரூபாய் கொடுக்க லகுவில் சம்மதப்பட மாட்டார்களல்லவா? அதனால் அவள் எங்கும் போக வேண்டி ஏற்படுவதில்லை. இதுதான் அவள் தந்திரம். இரண்டாவது காரணம்: என் சொந்த விருப்பம்" என்றான்.

இதை ராதாராணி நம்பவில்லை. ஆயினும் ஆவல் மிகுதியால் அவள் சற்று முன்னால் நகர்ந்து, "உங்கள் விருப்பத்தில் மண்ணைப்போட! இருக்கட்டும். அவள் ஏன் தொழிலை விட்டுவிட்டாள் என்பதைச் சொல்லுங்கள்" என்று கேட்டாள்.

"சொல்லுகிறேன், கேள்."

"சொல்லுங்கள்."

ஸத்யேந்திரன் சிறிதுநேரம் பேசாமலிருந்துவிட்டு, "இவள் பெயர் பிஜ்லி. ஒருசமயம்......ராணி! இங்கே யாராவது வருவார்கள். உள்ளே வருகிறாயா?" என்று எழுந்தான்.

"போவோம்" என்று சொல்லிக்கொண்டே ராதா ராணி சட்டென்று எழுந்தாள்.

* * *

தன் கணவனின் காலடியில் அமர்ந்து ராதாராணி எல்லாவற்றையும் கேட்டுப் புடைவைத் தலைப்பினால் தன் கண்களைத் துடைத்துக்கொண்டே, "இதற்காக அவளை இன்று அவமானம் செய்து பழிதீர்த்துக்கொள்ளப் போகிறீர்களா? இந்த யோசனையை உங்களுக்குச் சொன்னது யார்?" என்று கேட்டாள்.

ஸத்யேந்திரன் கண்களும் உலர்ந்திருக்கவில்லை. பேசும் பொழுது பலதடவை அவன் குரல் தழுதழுத்தது. ராதா ராணியை நோக்கி, "ஆமாம்! அவமானந்தான். ஆனால்—ஆனால் நான், நீ, அவள் இம்மூவரைத் தவிர இதை யாரும் அறிய மாட்டார்கள். யாருக்கும் இது தெரியவும் தெரியாது" என்றான்.

ராதாராணி பதிலொன்றும் சொல்லாமல் மீண்டும் ஒருமுறை தலைப்பினால் கண்களைத் துடைத்துக்கொண்டு எழுந்து வெளியே சென்றாள். அழைக்கப்பட்டிருந்த பெரிய மனிதர்கள் கூடம் நிரம்ப அமர்ந்திருந்தனர். மேல் மாடித் தாழ்வாரத்திலிருந்த ஸ்திரீகள் வெட்கத்துடன் போட்ட

இரைச்சல் படுதாவைத் துளைத்துக்கொண்டு வெளியே வந்தது.

எல்லா நாட்டியக்காரிகளும் தயாராகிவிட்டனர். ஆனால் பிஜ்லி அதுவரையில் தலையை நிமிராமலே பேசாமல் உட்கார்ந்துகொண்டிருந்தாள். கண்களில் நீர் பெருகியது. சம்பாதித்திருந்த பணமெல்லாம் இந்த ஐந்து வருஷ காலத்திற்குள் செலவழிந்துவிட்டது. சபதத்துடன் தியாகம் செய்ததை வேறு வழியில்லாததால் இன்று மீண்டு ஏற்றுக் கொண்டாள். ஆனால் அவளால் தலைநிமிர்ந்து நிற்கக்கூட முடியவில்லை. 'பரிசயமற்றவர்களின் ஆசை நிறைந்த பார்வையின்முன் தன் சரீரம் இம்மாதிரிக் கல்போலக் கனமாகிவிடும்; கால்கள் துவளும்' என்று இரண்டு மணி நேரத்திற்குமுன் அவள் கற்பனைகூடச் செய்யவில்லை.

"தங்களைக் கூப்பிடுகிறார்கள்."

பிஜ்லி தலை நிமிர்ந்து பார்த்தாள். பன்னிரண்டு பதின் மூன்று வயதுள்ள சிறுவன் ஒருவன் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தான். அவன் மேலே தாழ்வாரத்தைச் சுட்டிக்காட்டி, "வீட்டு மருமகளம்மா தங்களைக் கூப்பிடுகிறார்கள்" என்றான்.

பிஜ்லியால் இதை நம்ப முடியவில்லை; "யார் கூப்பிடுகிறார்கள்" என்று கேட்டாள்.

"வீட்டு மருமகளம்மா கூப்பிடுகிறார்கள்."

"நீ யார்?"

"நான் அவர்கள் வேலைக்காரன்"

பிஜ்லி தலையையாட்டி, "என்னைக் கூப்பிட்டிருக்க மாட்டார்கள். நீ போய் இன்னும் ஒருதரம் கேட்டுவிட்டு வா" என்றாள்.

சிறுவன் சிறிது நேரத்திற்கெல்லாம் திரும்பி வந்து, "தங்கள் பெயர்தானே பிஜ்லி? தங்களைத்தான் கூப்பிடு கிறார்கள். என்னோடு வாருங்கள், காத்துக்கொண்டிருக் கிறார்கள்" என்றான்.

பிஜ்லி விரைவாகத் தன் காலிலிருந்த சதங்கைகளை அவிழ்த்துப் போட்டுவிட்டு அந்தப் பையன் பின்னால் வீட்டுக்குள் சென்றாள். 'எஜமானியின் முக்கியமான உத்தரவு ஏதாவது இருக்கும். அதற்காகவே கூப்பிடுகிறார் கள் போலும்' என்று எண்ணினாள்.

படுக்கை அறையின் வாயிற் கதவருகில் ராதாராணி மகனை இடுப்பில் வைத்துக்கொண்டு நின்றிருந்தாள். பிஜ்லி கொஞ்சம் பயத்துடனும் ஸந்தேஹத்துடனும் மெள்ள வந்து அவள் முன் நின்றாள். உடனே ராதாராணி அவள் கையைப் பிடித்து அன்புடன் உள்ளே அழைத்துச்சென்று ஒரு நாற்காலியில் உட்கார வைத்துச் சிரித்துக்கொண்டே, "அக்கா, என்னைத் தெரிகிறதா?" என்று கேட்டாள்.

பிஜ்லி ஆச்சரியத்தினால் ஒன்றும் தோன்றாமல் திகைத் தாள். ராதாராணி தன் மடியிலிருந்த குழந்தையைக் காட்டி, "உனக்கு உன் தங்கையைத் தெரிந்துகொள்ள முடியா விடினும் பாதகம் இல்லை. இவனைக்கூட நீ தெரிந்துகொள்ள வில்லையென்றால் நான் உன்னோடு நிச்சயமாகச் சண்டை பிடிப்பேன்" என்று சொல்லிக் கொஞ்சலாகப் புன்னகை புரியலானாள்.

இந்தப் புன்னகையைக் கண்ட பிறகுங்கூடம் பிஜ்லியின் வாயினின்றும் ஒரு சொல்லும் வெளி வரவில்லை. ஆயினும் அவளுடைய இருள் நிறைந்த மனம் மெள்ள மெள்ள ஒளி பெறலாயிற்று. அந்தத் தாய் முகத்திலிருந்து ஒப்புவமை

யற்று அன்றலர்ந்த ரோஜா மலரைப்போலிருக்கும் குழந்தை முகத்தினிடம் அவள் பார்வை சென்றது. ஆனல் ராதாராணி மௌனமாகவே இருந்தாள். பிஜ்லி வெகு நேரம் அந்தக் குழந்தையையே பார்த்துக்கொண்டிருந்து விட்டுப் பிறகு எழுந்து தன் இருகைகளேயும் நீட்டி அவனே வாங்கித் தன் மார்புடன் அணைத்துக் கொண்டு அழலானுள்.

"என்ன அக்கா! அறிந்து கொண்டாயா?"

"ஆமாம்! அறிந்து கொண்டேன்."

"அக்கா, நீ சமுத்திரத்தைக் கடைந்து அதில் உண்டான விஷத்தையெல்லாம் ஏற்றுக்கொண்டு அமிர்தத்தை இந்தத் தங்கைக்கு அளித்துவிட்டாய். அவர் உன்னே விரும்பியதால்தான் நான் அவரை அடைய முடிந்தது" என்ருள் ராதாராணி.

பிஜ்லி ஸத்யேந்திரனின் சிறு போட்டோ ஒன்றைத் தன் கையிலெடுத்து அதை உற்று நோக்கிக்கொண்டிருந்து விட்டுத் தலைநிமிர்ந்து புன்சிரிப்புடன், "சகோதரி, விஷத்திற்கு விஷந்தான் அமிர்தம். நானும் வஞ்சிக்கப்படவில்லை. அந்த விஷம் இக்குரூரமான பாபியை அமரத்வம் உள்ளவளாகச் செய்துவிட்டது" என்ருள்.

ராதாராணி பதிலொன்றும் சொல்லாமல், "ஏன் அக்கா! அவரை ஒரு தடவை சந்திக்கிருயா?" என்ருள்.

பிஜ்லி கண்களை மூடி நிம்மதியடைந்து பின், "இல்லை! நான்கு வருஷங்களுக்கு முன் ஒருநாள் அவர் இந்த நீசமானவளை அறிந்து மிக்க வெறுப்புடன் முகந்திரும்பிச் சென்ற பொழுது நான் கர்வத்துடன் 'மீண்டும் சந்திப்பு ஏற்படும்; நீங்கள் மீண்டும் வருவீர்கள்' என்று கூறினேன். ஆனல்

என் கர்வம் வெல்லவில்லை. அவர் மீண்டும் வரவில்லை. கர்வத்தைக் குலைக்கக்கூடிய அக்கடவுள் என் கர்வத்தை ஏன் குலைத்தார் என்பதை இப்போது அறிகிறேன். சகோதரி, அவர் அழித்து மீண்டும் சிருஷ்டிக்கிறார், பிடுங்கிக்கொண்டு மீண்டும் அளிக்கிறார்; இதை நான் எவ்வளவு தூரம் அறிந்திருக்கிறேனோ அவ்வளவு வேறு யாரும் அறிந்திருக்க மாட்டார்கள்" என்று கூறித் தலைப்பினால் மீண்டும் ஒருமுறை கண்ணீரை நன்கு துடைத்துக்கொண்டு, "நான் மிகுதியான வறுமைத் துன்பத்தினால் கடவுளைத் தயையற்றவரென்றும், கொடுமையுள்ளவரென்றும் பல தோஷங்களைக் கூறித் தூற்றினேன். ஆனால், இப்பாபியிடம் அவர் எவ்வளவு தயை வைத்திருக்கிறார் என்பதை இப்பொழுதே அறிந்தேன். அவர் எனக்கு அவரைத் திருப்பித் தந்திருந்தால் நான் எல்லாவகைகளிலும் அழிந்து நாசமாகி யிருப்பேன். அவரை அடையமாட்டேன்; என்னையும் இழந்திருப்பேன்" என்று கூறினாள்.

ராதாராணியின் தொண்டை அடைத்துக்கொணடு விட்டது. ஒன்றுமே அவளால் பேச முடியவில்லை.

பிஜ்லி மீண்டும், "எப்பொழுதாவது சந்தித்தால் அவர் கால்களைப் பிடித்துக்கொண்டு மீண்டும் ஒருமுறை மன்னிப்புக் கேட்டுப் பார்க்கலாம் என்று எண்ணி யிருந்தேன். ஆனால் இப்பொழுது அதற்கு அவசியம் இல்லை. சகோதரி, இந்தப் படத்தை எனக்குக் கொடுப்பாயா? இதைத் தவிர நான் வேறு ஒன்றையும் விரும்பவில்லை. விரும்பினாலும் கடவுள் பொறுக்க மாட்டார். நல்லது! நான் சென்று வருகிறேன்" என்று சொல்லிப் பிஜ்லி எழுந்து நின்றாள்.

ராதாராணி தொண்டை அடைத்துக்கொண்டு வருங் குரலில், "அக்கா, இனி மீண்டும் எப்பொழுது பார்க்கலாம்?" என்ருள்.

"இல்லே; ஒருபொழுதும் இல்லே. எனக்கு இருக்கும் ஒரு சிறிய வீட்டையும் விற்றுவிட்டு எவ்வளவு சீக்கிரம் இங்கிருந்து சென்றுவிட முடியுமோ அவ்வளவு சீக்கிரம் சென்று விடுவேன். ஆனல், சகோதரி, ஒரு விஷயம்—சொல்ல முடியுமா? இவ்வளவு நாட்களுக்குப் பிறகு திடீரென்று அவருக்கு என் ஞாபகம் வரக் காரணம் என்ன? ஆட்கள் என்னே அழைக்க வந்தபொழுது பொய்ப் பெயரைச் சொல்லுவானேன்?" என்று கேட்டாள் பிஜ்லி.

ராதாராணியின் முகம் வெட்கத்தால் சிவந்தது. தலேயைக் குனிந்துகொண்டு பேசாமலிருந்தாள்.

பிஜ்லி சிறிதுநேரம் யோசனே செய்துவிட்டு, "நான் தெரிந்துகொண்டேன். என்னே அவமானம் செய்ய விரும்பினர். இதற்காகத்தானே?........... ஆம்! இதைத் தவிர என்னே இங்கு அழைத்துவர இவ்வளவு முயற்சி செய்யக் காரணம் வேறு ஒன்றுமேயில்லே" என்று சொன்னுள்.

ராதாராணியின் தலே இன்னும் தாழ்ந்தது. பிஜ்லி சிரித்துக்கொண்டே, "சகோதரி! இதில் நீ வெட்கப்பட என்ன இருக்கிறது? ஆனல் அவருடைய குற்றமும் இருக்கிறது. அவருடைய பாதங்களுக்குக் கோடி நமஸ்காரங்களுடன் 'இது நடக்கக் கூடியதல்ல; இப்பொழுது என்னுடையது என்று சொல்லிக்கொள்ள என்னிடம் ஒன்றும் இல்லே. மானமோ அவமானமோ எல்லாம் அவருடையனவே'

என்று நான் சொன்னதாக அவரிடம் சொல்லிவிடு" என்றாள்.

"நல்லது! அக்கா, நமஸ்காரம்!" என்று சொன்னாள் ராதாராணி.

"சகோதரி, நமஸ்காரம்! நான் வயதில் உன்னை விடப் பெரியவள். ஆயினும் உனக்கு ஆசிர்வாதம் செய்ய நான் அருகதை அற்றவள். நான் பரிசுத்தமான மனத்துடன் 'உன் மாங்கல்யம் அக்ஷயமாக இருக்கட்டும்' என்று கடவுளை வேண்டுகிறேன். வருகிறேன்."



# ஹைதர் காலம்



பிரபல சரித்திர ஆராய்ச்சியாளர்

**ஸ்ரீ தி. நா. சுப்பிரமணியன்**

எழுதிய

**சிறு கதைகள்**

ஹைதர் காலத்தை இன்றைக்கும் தமிழ் மக்கள் மறக்கவில்லை; என்றைக்கும் மறக்கமாட்டார்கள். அவ்விதம் தென்னாட்டையே கலக்கி வைத்த ஹைதர் அலி, திப்பு ஸுல்தான் ஆகியோருடைய காலங்களில் நிகழ்ந்த உண்மைச் சம்பவங்கள்: ஆனாலும் சுவையுள்ள கதைகள்.

ஸரளமான இனிய நடையில் எழுதப்பெற்றவை. ஒவ்வொருவரும் விரும்பி வாசிக்கும் கதைகள்.

விலை ரூபாய் ஒன்று: தபால் செலவு வேறு.

சூடாமணிப் பிரசுராலயம்

கோபாலபுரம் : சென்னை